# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

## சொல்வளமே மொழி வளம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 1 விளைச்சல் : 10 திருவள்ளுவர் ஆண்டு 2052 மார்ச்சுத் திங்கள் - 2021



காவல் கலைச்சொற்கள்!

தருமபுரம் ஆதீனக் கல்லூரியில் அகராதியியல் விழா!

சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி!

துறைசார் வல்லுநர் குழுக்கூட்டம்!

ஓவியக் கலைச்சொற்கள்!

# காவல் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| 1 | Patrol | - சுற்றுக்காவல் |
| 2. | Patron | - புரவலர் |
| 3. | Court summon | - நயன்மன்ற அழைப்பாணை |
| 4. | Bail | - பிணை |
| 5. | Cyber crime | - இணையதளக்குற்றம் |
| 6. | Traffic inspector | - போக்குவரத்துக் காவல் ஆய்வாளர் |
| 7. | Surety | - பிணையம் |
| 8. | Police manual | - காவல் கையேடு |
| 9. | Arrest warrant | - பிடியாணை |
| 10 | .Warrantor | - நம்புறுதி அளிப்பவர் |
| 11. | Warrant case | - பெருங்குற்ற வழக்கு |
| 12. | police force | - காவற்படை |
| 13. | Police Gazette | - காவல் அரசிதழ் |
| 14. | Police recruit school | காவலர் பயிற்சிப் பள்ளி |
| 15. | Police torture | - காவல் வதை |
| 16. | Police quarters | - காவலர் குடியிருப்பு |
| 17. | Police orderly | - காவல் ஏவலர் |
| 18. | Police guard | - காவலர் காப்பு |
| 19. | Accuse | - குற்றச்சாட்டு |
| 20. | mobile police station | - செல்லிடக்காவல் நிலையம் |
| 21. | Wrongful confirment | - முறையற்ற சிறைவைப்பு |
| 22. | Sub jail | - சார் சிறை |
| 23 | .Stay order | - தடுப்பு ஆணை |
| 24. | Police custody | - காவல் வயப்பாடு |
| 25. | Police investigation | - காவல் புலனாய்வு |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2052 - சார்வரி - மாசி
மார்ச்சு 2021

ஆசிரியர் : தங்க. காமராசு
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திருமதி. ஜெ. சாந்தி
திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திரு. ப. தீபக்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை - 600 028.
கட்டணமில்லா அழைபேசி : 14469
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com


உலகத் தமிழர்களின் படைப்புகள், செய்தித் துணுக்குகள், நிகழ்வுகளின் ஒளிப்படங்கள் ஆகியவை வரவேற்கப்படுகின்றன



# ஆசிரியர் பேசுகிறார்

## வேருக்கு நீர் வார்க்கும் பணி!

அன்பானவர்களுக்கு வணக்கம்!

பிப்பிரவரித் திங்கள் பரபரப்பாகவும் விறுவிறுப்பாகவும் கடந்தது. பிப்பிரவரித் திங்களைத் திட்டச் செயலாக்கத் திங்களாகவே கருதலாம். 2020–2021 ஆம் நிதியாண்டிற்காகச் சட்டமன்றத்தில் அறிவிக்கப் பெற்ற அகரமுதலி இயக்ககத்திற்கான திட்டங்கள் பத்தில் இதுவரை ஏழு திட்டங்களுக்கு அரசாணைகள் வந்துவிட்டன. அவற்றில் ஐந்து திட்டங்களைப் பிப்பிரவரித் திங்களுக்குள் செயற்படுத்த வேண்டிய கட்டாயமும் நெருக்கடியும் ஏற்பட்டன. இதைத் தவிர, தமிழ் அகராதியியல்நாள் விழாவுக்கான ஏற்பாடுகள், சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் திருந்திய பதிப்பு மற்றும் மூன்று புதிய அகராதிகளை வெளியிடும் பணி, சொல்வயல் பணி, வாலாயமாகத் திங்களுக்கு இரண்டு முறை தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்கள் நடத்துதல் என்று அடுக்கடுக்கான அழுத்தங்கள் இயக்ககத்தைத் திக்குமுக்காட வைத்தன. இப்படிப்பட்ட நெருக்கடிகளை எதிர்கொண்டே பழக்கப்பட்டிருந்த இயக்ககத்திற்குத் தொடக்கத்தில் அச்சமிருந்தாலும், அனைத்துப் பணிகளும் நிறைவாகச் செய்து முடிக்கப்பட்டன.

47 ஆண்டுக் கால வரலாற்றில் 2021 பிப்பிரவரி 1ஆம் நாளை மறக்க முடியாது. இந்த நாளில் இவ்வியக்ககம் சார்பில் தேவநேயப் பாவாணர் மற்றும் வீரமாமுனிவர் பெயர்களில் இரண்டு விருதுகள் வழங்கப்பட்டன. வீரமாமுனிவர் விருதுக்கு ஹாங்காங் நாட்டு அகராதி அறிஞர் முனைவர் கிரிகோரி ஜேம்சு அவர்களையும், தேவநேயப் பாவாணர் விருதுக்குச் சட்ட ஆட்சியச் சொற்களைத் தொகுத்து வெளியிட்ட முதுபெரும் அறிஞர் முனைவர் கு.சிவமணி அவர்களையும் தேர்வு செய்ததனைத் தமிழுலகம் பாராட்டியது.

பிப்பிரவரி 2 ஆம் நாள் சென்னை கடற்கரை காமராசர் சாலையில் அமைந்துள்ள விலிங்டன் சீமாட்டி கல்வியியல் மேம்பாட்டு நிறுவனக் கலையரங்கில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டத்தின் தொடக்கவிழா நடைபெற்றது. இதில் தொழில் நுட்பக் கல்வி இயக்ககத்தின் இயக்குநர் திரு.விவேகானந்தன் இ.ஆ.ப., அவர்கள் கலந்து கொண்டு சிறப்பித்தார். தொடர்ந்து நான்கு நாள்கள் நடைபெற்ற பயிற்சி வகுப்பின் நிறைவு விழாவில் தமிழ்வளர்ச்சித் துறை அமைச்சர், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் இயக்குநர் பேரா.திரு.சந்திரசேகரன் ஆகியோர் கலந்து கொண்டு, சென்னை மண்டிலத்திற்குட்பட்ட 20 கல்லூரிகளைச் சேர்ந்த 200 மாணவ–மாணவியருக்குச் சொற்குவை மாணவத் தூதுவர் சான்றிதழ்களை வழங்கினார்கள்.

“சொற்குவைத் திட்டம் உலகத் தமிழர்களிடையே மிகப் பெரிய வரவேற்பைப் பெற்றிருக்கிறது”என்று தன் கருத்தை அமைச்சர் பதிவு செய்தார். “அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்குச் செம்மொழி நிறுவனம் பெரிதும் உறுதுணையாக இருந்து தமிழ்ப்பணி செய்யும்” என்று அதன் இயக்குநர் உறுதியளித்தார். இவை அகரமுதலி இயக்ககத்திற்கு ஊக்கமளித்தன.

பிப்பிரவரி 6ஆம் நாள் இயக்ககத்தில் நடைபெற்ற ஊடகத்துறை வல்லுநர் குழுக் கூட்டத்தில் பொதிகை தொலைக்காட்சி, மக்கள் தொலைக்காட்சி, தினமணி, தினத்தந்தி, தினமலர் உள்ளிட்ட 15க்கும் மேற்பட்ட ஊடக நிறுவனங்களைச் சேர்ந்த அன்பர்கள் கலந்து கொண்டு தூயதமிழ்ச் சொற்களை மக்களிடையே புழக்கத்திற்குக் கொண்டு செல்லும் வழிமுறைகளைப் பற்றி தங்களுடைய கருத்துகளைப் பதிவு செய்தார்கள். இந்தக் கூட்டத்திற்குத் தலைமையேற்று உரை நிகழத்திய செய்தி – மக்கள் தொடர்புத்துறையின் இயக்குநர் திரு.தெ.பாஸ்கரபாண்டியன் அவர்கள் தமிழ்மொழியின் தொன்மை, பெருமைகளை ஆழமாக எடுத்தியம்பினார்.

தேவநேயப் பாவாணரின் பிறந்தநாள் பிப்பிரவரி 7ஆம் நாள் என்று அறிஞர்கள் கொண்டாடி வரும் நிலையில், தமிழ்நாள் கணக்கின்படி அவரின் பிறந்த நாள் சுறவம் 26ஆம் நாள் என்பதைக் கருத்தில் கொண்டு, அதன்படி இந்தாண்டு சுறவம் 26ஆம் நாளாகிய பிப்பிரவரி 8ஆம் நாளன்று இவ்வியக்க கத்திலுள்ள தேவநேயப் பாவாணர் சிலைக்கு மாலை அணிவித்துச் சிறப்புச் செய்யப்பட்டது.

யாரும் எதிர்பாராத நிலையில் இந்நிகழ்வில் திரு.பெ. மணியரசன் உள்ளிட்ட மூத்த தமிழறிஞர்கள்பலர் பெருந்திரளாகக் கலந்துகொண்டு, பாவாணரின் தமிழ்ப் பணிகளை நினைவு கூர்ந்து உணர்ச்சிப் பொங்கப் பேசினார்கள்.

ஒரே ஆண்டில் 6 வகையான விருதுகளை 80பேர் பெரும் வகையில் திட்டங்களை வாங்கியது அகரமுதலி இயக்ககமாகத்தான் இருக்கமுடியும். மாவட்டத்திற்கு ஒருவர் என்ற வகையில் தூயதமிழ்ப் பற்றாளர் விருது 37 பேருக்கும், சொல்லின் தாய்விருது 37 பேருக்கும், மரபுக்கவிதை, புதுக்கவிதைப் பிரிவுகளில் நற்றமிழ்ப் பாவலர் விருது 2 பேருக்கும், அச்சுஊடகம், காட்சிஊடகப் பிரிவுகளில் தூய தமிழ் ஊடகவிருது 2 ஊடகங்களுக்கும் வழங்கப்படும் எனஅறிவிக்கப் பெற்று, சொல்லின் தாய் விருது தவிர்த்த ஏனைய விருதுகளுக்குரிய விருதாளர்களைத் தேர்வுசெய்வது தொடர்பான பணிகள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாகப் பிரித்து வழங்கப்பட்டன.

தூயதமிழ்ப் பற்றாளர் விருதுக்கு முனைவர் வே.கார்த்திக், நற்றமிழ்ப் பாவலர் விருதுக்குத் திரு.கி.இராமர், தூய தமிழ் ஊடக விருதுக்குத் திரு.வே.பிரபு, சொல்லின் தாய் விருதுக்குத் திருமதி ஜெ.சாந்தி ஆகியோர் ஒருங்கிணைப்பாளர்களாக அமர்த்தப்பட்டனர்.

பிப்பிரவரி 8 மற்றும் 9 ஆம் நாள்களில்தூயதமிழ்ப் பற்றாளர் விருதுக்கான அலைபேசி வழி நேர்காணல் நடைபெற்றது. பிப்பிரவரி 10ஆம் நாளன்று நற்றமிழ்ப் பாவலர் விருதுக்கான வெற்றியாளர்களைத் தெரிவு செய்வதற்கான தேர்வு நடைபெற்றது. அன்றைய நாளே தமிழ்க் கலைக்கழகத்தின் 79ஆம் கூட்டம் நடைபெற்றது. பிப்பிரவரி 12 ஆம் நாள் மயிலாடுதுறை தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரியில் நடைபெற்ற அகராதியியல் விழிப்புணர்வுக் கூட்டத்தில் கலந்து கொண்டு தருமபுரம் ஆதீனம் 27ஆவது குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் சிறப்புரை வழங்கினார்கள். 200க்கும் மேற்பட்ட மாணவர்கள் தமிழில் கையொப்பமிட்டு வழங்கிய சட்டகத்தை இவ்வியக்ககத்திற்கு நினைவுப் பரிசாக வழங்கிய போது, சன்னிதானம் அவர்களும் தமிழில் கையொப்ப மிட்டது நிறைவாக இருந்தது.

26ஆம் சன்னிதானம் தான் முதன் முதலில் தமிழில் கையொப்பமிட்டார்கள். அதன்பிறகு இந்நிகழ்வின் வாயிலாக நான் தமிழில் கையொப்பமிடத் தொடங்கியிருக்கிறேன், இன்றிலிருந்து கல்லூரியில் பயிலும் மாணவ–மாணவியர் தமிழில் மட்டுமே கையொப்பமிட வேண்டும், தூயதமிழில் மட்டுமே பேசவும் எழுதவும் வேண்டும் என்ற உறுதிமொழியை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சன்னிதானம் அவர்கள் பேசியது அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்ப் பணிக்கு உரமூட்டியது. அந்நிகழ்வில் முனைவர் மு.சிவச்சந்திரன், முனைவர் சி.சிவசங்கரன், முனைவர் சிவ.ஆதிரை, முனைவர் இரா.செல்வநாயகம், முனைவர் து.கார்த்திகேயன் ஆகியோர் உரை நிகழ்த்தினார்கள். கல்லூரியின் முதல்வர் முனைவர் சி.சுவாமிநாதன் அவர்கள் சிறந்த முறையில் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருந்தார்.

பிப்பிரவரி 17ஆம் நாளன்று தூய தமிழ் ஊடக விருதுக்கான தேர்வு நடைபெற்றது. பிப்பிரவரி 22ஆம் நாள் பள்ளி மாணவ–மாணவியருக்கு மாநில அளவிலான கலைச் சொல்லாக்கப் போட்டி மற்றும் ஓவியப் போட்டி இணைய வழியில் நடைபெற்றது. பிப்பிரவரி 23ஆம் நாள்தமிழ்க் கலைக் கழகத்தின் 80ஆவது கூட்டம் நடைபெற்றது. பிப்பிரவரி 26ஆம் நாள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் திருந்திய பதிப்பு முதலமைச்சர் அறையில் வெளியிடப் பட்டது.

பிப்பிரவரி 27ஆம் நாள் இயக்ககக் கூட்டரங்கில், தமிழமைப்பினர் பங்கேற்ற பல துறை வல்லுநர் குழுக்கூட்டம் நடைபெற்றது. தமிழ்நாட்டின் பல்வேறு மாவட்டங்களிலிருந்தும் பல அறிஞர்கள் கலந்து கொண்டு, தங்கள் உணர்வுகளை வெளிப்படுத்தியது நெகிழ்வை ஏற்படுத்தியது. ‘‘அகரமுதலி இயக்ககம் செயற்படுத்தும் திட்டங்கள் அனைத்தும் தமிழ் மொழியின் வேருக்கு நீர் வார்ப்பது போல் இருக்கின்றன’’ என்று தங்கள் கருத்தைப் பரவலாகப் பதிவு செய்தார்கள். அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்ப் பணிகளுக்கு உலகம் முழுவதிலிருந்தும் செயலாற்றும் தமிழ் அமைப்புகள் நல்ல ஒத்துழைப்பை வழங்கக் காத்திருக்கின்றன என்றும் பலர் பேசினார்கள். ‘‘தமிழால் இணைவோம், தமிழாக வாழ்வோம்’’ என்று சிலர் முழங்கினார்கள்.

இவ்வாறாக இந்த பிப்பிரவரித் திங்களைப் பொறுத்தளவில் இயக்ககப் பணிகள் விரைவாகவும் நிறைவாகவும் அமைந்தன. இந்த இயக்ககத்தின் தமிழ்ப்பணிகள் வருங்காலங்களிலும் தொய்வில்லாமல் தொடரும்.

மீண்டும் சந்திப்போம்...

# தேவநேயப் பாவாணர் பிறந்த நாள் விழா !



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் “மொழிஞாயிறு” ஞா.தேவநேயப் பாவாணரின் பிறந்தநாள் விழா சுறவம் 26 ஆம் நாள் (08.02.2021) சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இயக்குநர் திரு.தங்க.காமராசு அவர்கள் தலைமையில் நடைபெற்ற இவ்விழாவில்தமிழ் வளர்ச்சி (ம) செய்தித்துறை அரசு சார்பு செயலாளர் கோ.செந்தில்குமார், தமிழ் வளர்ச்சி பிரிவு அலுவலர் க.பூங்கொடி, புலவர் வெற்றியழகன், தமிழ்த் தேசியப் பேரியக்கத் தலைவர் பெ.மணியரசன், தினமணி கட்டுரையாளர் உதயை மு.வீரையன், திருவள்ளுவர் தமிழ்வழிக் கல்விக் கழக ஒருங்கிணைப்பாளர் இறை பொற்கொடி, மொழிபெயர்ப்புத் துறை முன்னாள் உதவி இயக்குநர் கு.பாலசுப்பிரமணியன், தலைமைச் செயலகம் மொழிபெயர்ப்புத்துறை உதவிப் பிரிவு அலுவலர் த.இளவேனில்முல்லை ஆகியோர் உட்பட பல்வேறு தமிழ் அமைப்புகளின் நிருவாகிகள் தமிழறிஞர்கள், அகரமுதலி இயக்ககத்தின் பணியாளர்கள் கலந்து கொண்டு தமிழறிஞர் தேவநேயப் பாவாணர் சிலைக்கு மாலை அணிவித்துச் சிறப்புச் செய்தனர்.

## அகராதியியல் விழிப்புணர்வு விழா !
## தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரி(12.02.2021)




இவ்விழாவில் தருமபுரம் ஆதீனம் கலைக் கல்லூரியின் புரவலர் (ம) தலைவர், சீர்வளர் சீர் கயிலை மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், கல்லூரியின் முதல்வர் முனைவர் சி.சுவாமிநாதன், கல்லூரியின் செயலர் முனைவர் இரா.செல்வநாயகம், அகரமுதலி இயக்கக இயக்குநர் திரு.தங்க.காமராசு, தருமபுரம் ஆதீனம் கலைக் கல்லூரியின் தமிழ் உயராய்வுத்துறைத் தலைவர் முனைவர் சிவ.ஆதிரை, அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் சிறப்பு மேனாள் விரிவுரையாளர் முனைவர் சி.சிவசங்கரன்,ஆதீனம் கலைக் கல்லூரியின் முன்னைத் தமிழ்த்துறைத்தலைவர் திரு.மு.சிவச்சந்திரன், அகரமுதலி பதிப்பாசிரியர், மற்றும் கல்லூரி மாணவ–மாணவிகள், அகராதியியல் அறிஞர்கள், பேராசிரியர்கள் பெருந்திரளாகக் கலந்துகொண்டனர்.

# அறிய வேண்டிய அரிய செய்தி -10

காலத்தோடு மக்கள் வாழ்க்கைச் செலவு

'காலம்' என்ற கருத்தைத் தமிழ்மக்கள் தொன்மைக் காலத்திலேயே அறிந்திருந்தனர் என்பதற்குச் சான்றுகள் நிரம்ப உள்ளன. இடத்தையும் பொழுதையும் இணைத்து முதற்பொருள்களாகத் தொல்காப்பியம் பகர்கிறது.

"முதல் எனப்படுவது நிலம் பொழுது இரண்டின்
இயல்பென மொழிப இயல்பு ணர்ந்தோரே"
(தொல்.949)

தொல்காப்பியம் கூறிய நிலம் என்பது இடத்தையும், பொழுது என்பது காலத்தையும் குறித்தது. அக்காலத் தமிழ்மக்கள் தங்கள் வாழ்முறையிலும் தொழில் முறையிலும் காலத்தையும் அதன் மாற்றத்தையும் உணர்த்தும் வானியலையும் அவரவர் தொழிலுக்குப் போதுமான அளவில் அறிந்திருந்தனர்.

அறிவியல் அறிஞர் ஐன்சுடீன் இடத்தையும் காலத்தையும் நடுவாக வைத்தே அவரின் சார்பியல் கோட்பாட்டை அமைத்திருந்தார். "இந்தப் பேரண்டத்தில் எந்த ஒரு பொருளும் நகர்ந்து கொண்டும் இயங்கிக்கொண்டும் இருக்கிறதே ஒழிய நிலையாக ஓரிடத்தில் எதுவும் நிற்பதில்லை" என்று அவர் கூறினார்.

அவர் கூறிய எடுத்துக்காட்டுடனேயே பார்த் தோமானால், மிக விரைவாக ஓடிக் கொண்டிருக்கிற, முற்றிலும் மூடப்பட்ட, உயர்தர சொகுசு தொடர் வண்டியில் உள்ளே அமர்ந்திருப்பவர்க்கு வண்டி நின்று கொண்டிருப்பதாகவே தெரியும். வெளியில் நின்று பார்த்தால் மட்டுமே வண்டி ஓடுவது தெரியும். ஒருமணி நேரத்திற்கு ஒருமுறை ஒரு நிலையத்தைக் கடப்பதாகக் கொண்டால், அவர் ஒவ்வொரு நிலையம் கடக்கும்போது ஒரு மணிநேரம் ஆகிவிட்டதை உணர்வார்.

ஒருவர் அமைதியாக ஓர் அறையில் அமர்ந்திருந்தாலும் அவர் மணிக்கு 1600 சீர்கல் (Km/h) சுழன்று கொண்டிருக்கும் உலக உருண்டையோடு சுழன்று கொண்டிருக்கிறார். அதுமட்டுமல்லாமல் உலக உருண்டையானது மணிக்கு 1,07,000 சீர்கல் (Km/h) வேகத்தில் கதிரவனையும் சுற்றும் நிலையில் தானும் அதோடு சேர்ந்து சுற்றுகிறார். அந்த வேகத்தில் ஒவ்வொரு பொருளும் நகர்ந்து கொண்டிருப்பதை நாம் உணர்வதில்லை.

பகலில் கதிரவன் தோன்றி மறைவதை வைத்து உலகம் சுழன்று கொண்ருப்பதை அக்கால மக்கள் உணர்ந்திருந்தனர்.

இரவில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருக்கும் விண்மீன் கூட்டம் அடுத்த நாள் நகர்ந்து வேறொரு விண்மீன் கூட்டம் அங்கிருப்பதைக் கண்ணுற்றனர். இவ்வாறு இருபத்தேழு நாள்களுக்குப்பிறகு மறுபடியும் முதல்நாள் கண்ணுற்ற விண்மீன்கூட்டம் அங்குத் தோன்றுவதைக் கொண்டு அந்த இருபத்தேழு கூட்டத்திற்கும் அதாவது அக்கூட்டத்தில் விளங்கித் தெரியும் ஒவ்வொரு மீனிற்கும் ஒவ்வொரு பெயரைப் பதிவுசெய்தனர். ஒரு மாதத்தை நிலவின் வெள்ளுவா (பௌர்ணமி) அல்லது காருவா (அமாவாசை) மாற்றத்தைக் கொண்டு அளந்து கொண்டனர்.

இதேபோல் கதிரவன் தோன்றுவதற்குச் சற்றுமுன் தோன்றும் விண்மீன் கூட்டத்தை மேழம் (ஆடு), விடை (காளை), மடங்கல் (அரிமா), கடகம் (நண்டு) இவ்வாறு உருவ அமைப்புகளை அளித்து ஆண்டு முழுவதும் 12 ஓரைகளாகக் காட்சிப் பதிவு செய்து கொண்டனர்.

எந்த ஓரை வரும்போது மழை, எந்த ஓரை வரும்போது கோடை என்று குறித்துக்கொண்டு அந்தக் காலக்கணிப்புகளை அன்றைய தமிழ்மக்கள் தங்களின் முகாமைத் தொழில்களான உழவு, கால்நடை வளர்ப்பு, மீன்பிடி ஆகியவற்றிற்குப் பயன்படுத்திக்கொண்டனர்.

நம் உலக உருண்டை தானும் சுற்றிக்கொண்டு கதிரவனையும் சுற்றுகிறது. இந்தக் கதிரவ மண்டிலம் தானும் சுழன்று இந்தப் பால்வெளி மண்டிலத்தையும் சுற்றுகிறது. இந்தப் பால்வெளி மண்டிலமானது தன்னைப்போல் உள்ள பல பால்வெளி மண்டிலங்கள் அமைந்த இந்தப் புடவி என்னும் பேரண்டத்தைச் சுற்றிக் கொண்டுள்ளது. இப்புடவி தானும் சுற்றிக்கொண்டு எதையோ நோக்கி வேகமாகப் போய்க் கொண்டுள்ளது.

நாம் மூடிய தொடர் வண்டிக்குள் அமர்ந்து அமைதியாகச் செல்வதும், கதவைத் திறந்து பார்க்கும்போது ஒரு மணிநேரத்திற்கு ஒரு நிலையத்தைக் கடக்கும்போது ஒருமணி நேரத்தைக் கடந்துவிட்டதாகக் கணக்கிடுவது போல், கதிரவன் ஒருமுறை தோன்றுவதிலிருந்து அடுத்தமுறை தோன்றுவதுவரை ஒரு நாளையும், 27 விண்மீன்கள் சென்று முடியும்போது ஒரு மாதத்தையும், 12 ஓரைகள் சென்று முடியும்போது ஓர் ஆண்டையும் கணக்கிட்டுக் காலத்தோடு நாம் வாழ்க்கை முழுவதும் சென்று, எங்கோ செல்லும் புடவியின் வேகத்தில் அதுபோன போக்கில் சென்று கொண்டுள்ளோம் நம்மையும் அறியாமல்.

முனைவர் மா.பூங்குன்றன்
பதிப்பாசிரியர்–அகரமுதலி இயக்ககம்

❖



# அகரமுதலி இயக்ககத்தில் மாநில அளவில் ஓவியம் மற்றும் சொல்லாக்கப் போட்டிகள்!

## வெற்றியாளர்களுக்குத் தமிழ் அகராதியல் நாள் விழாவில் பரிசளிக்க ஏற்பாடு!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், 2020ஆம் ஆண்டுக்கான தமிழ் அகராதியியல் நாள் விழாவை முன்னிட்டு, பள்ளி மாணவர்களுக்கு மாநில அளவிலான ஓவியப்போட்டி மற்றும் கலைச்சொல்லாக்கப் போட்டி 22.02.2021 ஆம் நாள் இணையவழியில் நடைபெற்றது.

கொடுக்கப்படும் சொற்களின் பொருளறிந்து அதற்கேற்ற படம் வரைவதன் மூலம் மாணவர்களின் மொழியறிவையும் ஓவியத்திறனையும் ஊக்குவிப்பதாக ஓவியப் போட்டி அமைந்தது. கலைச்சொல்லாக்கப் போட்டி என்பது, மாணவர்களிடையே ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்ச் சொற்களை வடிவமைக்கும் ஆற்றலை வளர்த்தெடுப்பதாய் அமைந்தது.

இணையவழியில் நடைபெற்ற ஓவியப்போட்டியில் தமிழகம் முழுவதிலிருந்தும் 119 மாணவ–மாணவியரும், கலைச் சொல்லாக்கப் போட்டியில் 117 பேரும் பங்கேற்று, தங்களின் தனித்திறனையும் தமிழ்த்திறனையும் மெய்ப்பித்துக்காட்டினார்கள்.

ஓவியப்போட்டிக்கு அரசு கவின்கலைக் கல்லூரிப் பயிற்றுநர் முனைவர் கு.கவிமணி, பழனியப்பா பதிப்பக ஓவியர் திரு.ஆ.சுயம்புலிங்கம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக மேனாள் ஓவியர் திரு. ச.கி.கணேசன் ஆகியோர் நடுவர்களாகச் செயலாற்றி வெற்றியாளர்களைத் தேர்வுசெய்தனர்.

கலைச்சொல்லாக்கப் போட்டிக்கு, மொழிபெயர்ப்புத் துறையின் உதவிப் பிரிவு அலுவலர் திருமதி. த.இளவேனில் முல்லை, மேனாள் தலைமையாசிரியர் திருமதி.பொம்மக்காள், அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் அலுவல்சாரா உறுப்பினர் திரு.அ.மதிவாணன் ஆகியோர் நடுவர்களாகச் செயலாற்றி வெற்றியாளர் களைத் தெரிவுசெய்தனர்.

கலைச்சொல்லாக்கம் மற்றும் ஓவியப் போட்டியில் மதிப்பெண் அடிப்படையில் முதல் இரு இடங்களைப் பெற்றவர்கள் வெற்றியாளர்களாகத் தேர்வு செய்யப் பட்டனர். வெற்றிபெற்றவர்களுக்கு முதல் பரிசாக ரூ.10,000–மும், இரண்டாம் பரிசாக ரூ.5,000–மும் தமிழ் அகராதியியல் நாள் விழாவின் போது வழங்கப்படவுள்ளன.

## 4 நாட்கள்...
## 20 கல்லூரிகள்...
## 200 மாணவர்கள்...
## 16 வகுப்புகள்...
## 1081 புதிய கலைச்சொற்கள்...

# - மாணவர் தூதுவர்கள் புரட்சி!

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டத் தொடக்கவிழா 02.02.2021 செவ்வாய்க் கிழமையன்று, விலிங்டன் சீமாட்டி கல்வியியல் மேம்பாட்டு நிறுவனக் கலையரங்கில் நடைபெற்றது.

இப்பயிற்சித் திட்டத்தின் முதற்கட்டமாக, சென்னை மண்டிலத்திலுள்ள 20 கல்லூரிகளில் பயிலும் மாணவர்களில் 200 பேர் தெரிவுசெய்யப்பட்டு, 50பேர் கொண்ட நான்கு குழுக்களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு குழுவிற்கும் ஒருநாள் என்ற வகையில் 02.02.2021 முதல் 05.02.2021 வரை நான்கு நாள்கள் சொல்லாக்கப் பயிற்சி அளிக்கப்பட்டது.

இந்நிலையில் 02.02.2021 ஆம் நாள் நடைபெற்ற சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டத்தினைத் தொடங்கி வைத்துச் சிறப்புரையாற்றிய சென்னை, கல்லூரிக் கல்வி இயக்ககத்தின் அன்றைய இயக்குநர் (மு.கூ.பொ.) திரு.கே.விவேகானந்தன் இ.ஆ.ப. அவர்கள், நாட்டுக்கும் மொழிக்கும் இதுபோன்ற பணிகள்தான் மிகவும் தேவை என்று கூறினார். அகரமுதலி இயக்ககத்தின் மொழிப்பணிகள் வியப்பாக உள்ளதாகவும், புதுமையான மற்றும் தொலைநோக்குத் திட்டங்களை இவ்வியக்ககம் செயற்படுத்தி வருவதாகவும் தெரிவித்தார். மேலும், பெருந்தொற்றுக் காலத்திலும்கூட 200 மாணவர்களை 50பேர் கொண்ட 4 குழுக்களாகப் பிரித்து, சொல்லாக்கப் பயிற்சி அளிப்பதனைப் பாராட்டுவதாகவும், அகரமுதலி இயக்ககத்திற்குக் கல்லூரிக் கல்வி இயக்ககமும் தொழில்நுட்பக் கல்லூரி இயக்ககமும் தொடர்ந்து முழு ஒத்துழைப்பை வழங்கும் என்றும் தெரிவித்தார். இதுபோன்ற சொல்லாக்கப் பயிற்சி வகுப்புகளையும் பயிலரங்குகளையும் பொறியியல் கல்லூரிகளிலும் அகரமுதலி இயக்ககம் நடத்தி பொறியியல் சார்ந்த கலைச்சொற்களைத் திரட்ட வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

விழாவில் பங்கேற்று மாணவர்களிடையே உரையாற்றிய, தேவநேயப் பாவாணர் விருது பெற்ற முனைவர் கு.சிவமணி அவர்கள், அகரமுதலி இயக்ககத்தின் தற்போதைய செயற்பாடுகள் பாவாணரின் கனவுகளை மெய்ப்பிக்கும் வண்ணம் முழுவீச்சிலும் பெரிய அளவிலும் உலகத் தமிழர்களின் பாராட்டினைப் பெறும் வகையிலும் உள்ளதாகக் கூறினார். மேலும், இன்றைய தலைமுறை மாணவர்கள் எதனையும் ஏன்? எதற்கு? என்று ஆராயும் மனப்பான்மை கொண்டவர்களாக உள்ளனர் என்றும், இன்றைய கணினியுலகம் அதற்குரிய வாய்ப்புகளை அவர்களுக்கு வழங்குகிறது என்றும், இவற்றைப் பயன்படுத்தி மாணவர்கள் தமிழ்மொழியின் பாதுகாப்பிற்கும் வளர்ச்சிக்கும் தங்களின் பங்களிப்பை வழங்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

விழாவில் அகரமுதலி இயக்கக இயக்குநர் திரு.தங்க.காமராசு அவர்கள் வரவேற்புரையும் பயிற்சித் திட்டத்தின் நோக்கம் குறித்தும் உரையாற்றினார்.

நிறைவாக நன்றியுரைகூறிய சென்னை மண்டலக் கல்லூரிக் கல்வி இணை இயக்குநரும், பயிற்சித் திட்டத்தின் ஒருங்கிணைப்பாளருமான முனைவர் இரா.இராவணன் அவர்கள், அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்ப்பணிகளுக்குக் கல்லூரிக் கல்வி இயக்ககப் பேராசிரியர்கள், மாணவர்களின் ஒத்துழைப்பு தொடர்ந்து இருக்கும் என்றும், மாணவர்கள் இந்தப் பயிற்சி வகுப்பை நல்லமுறையில் பயன்படுத்திக்கொண்டு வருங்காலத்தில் புகழ்பெற்ற சொல்லாக்க வல்லுநர்களாக உருவாகி, தமிழுக்குத் தொண்டாற்ற வேண்டும் என்று கூறினார்.

விழாவில் பங்கேற்ற மாணவர்களுக்கு அகரமுதலி இயக்ககத்தின் திட்டங்களையும் செயற்பாடுகளையும் விளக்கும் பயிற்சிக் கையேடு வழங்கப்பட்டது. விழாவில், மாணவர்களுக்குப் பயிற்சியளிக்கவுள்ள பயிற்றுநர்கள், பேராசிரியர்கள், மாணவ–மாணவிகள் உள்பட பலர் பங்கேற்றுச் சிறப்பித்தனர்.

5.02.2021 ஆம் நாள் நடைபெற்ற நிறைவு விழாவில், பயிற்சியில் பங்கேற்ற 200 மாணவர்களுக்கும் சான்றிதழ்கள் வழங்கப்பட்டன. ❖




# திருக்குறள் சொன்னால் கன்னெய் இலவயம்!



வளரும் தலைமுறை மாணவ–மாணவியர் உலகப் பொதுமறையாம் திருக்குறளை நன்கு கற்க வேண்டும் என்பதற்காகவும், குறளின் மீது அவர்களின் ஆர்வத்தைத் தூண்ட வேண்டும் என்பதற்காகவும் குறள்களை ஒப்புவிக்கும் மாணவ–மாணவியருக்கு இலவயமாகக் கன்னெய் (பெட்ரோல்) வழங்கி வருகிறார் கரூரைச் சேர்ந்த திரு.செங்குட்டுவன் அவர்கள் .

மதுரை புறவழிச் சாலை வள்ளுவர் நகரில் உள்ள வள்ளுவர் கன்னெய் (பெட்ரோல் பங்க்) நிலையத்திற்கு வந்து 10 குறள்களைச் சொல்லும் மாணவ–மாணவியருக்கு அரை லிட்டர் கன்னெயும், 20 குறள்களைச் சொன்னால் ஒரு லிட்டர் கன்னெயும் இலவயமாக வழங்கப்படும் என்றும், தைத் திருநாளான சனவரி 14 முதல் ஏப்பிரல் 30ஆம் நாள்வரையில் இந்த அறிவிப்புச் செயற்படுத்தப்படும் என்றும் தெரிவித்துள்ளார் திரு.செங்குட்டுவன்.

இளம்தலைமுறை நெஞ்சங்களில் உலகப்பொதுமறையை விதைக்க நல்லதொரு முயற்சியை முன்னெடுத்துள்ள திரு.செங்குட்டுவன் போன்ற தமிழன்பர்களின் எண்ணம் நிறைவேற நற்றமிழால் வாழ்த்துவோம் நாம்.








# ஓவியத்துறைக் கலைச் சொற்கள்



முனைவர் கு.கவிமணி

உலகில் மனிதர்கள் முதன் முதலில் உருவாக்கிய கலைவடிவம் என்றால் அது ஓவியக்கலையே. பேசுவதற்கு முன்பாகவே மனிதன் சித்திரங்களை வரைந்ததைப் பெருங்கற்காலப் பாறை ஓவியங்கள் மூலம் அறியமுடிகின்றது. அத்தகைய ஓவியக்கலை சார்ந்த கலைச்சொற்கள் ஏராளமாக உள்ளன.

## ஓவியம்

உலகத்தை வடிவங்களாகக் காட்சிப்படுத்தும் ஒரு ஒப்பற்ற கலையே ஓவியம். இது காண்போரை வியப்பில் ஆழ்த்துவதும், மகிழ்ச்சிப்படுத்தக்கூடியதாகவும், சிந்திக்க வைப்பதாகவும் உள்ளதால் ஓவு (வியப்பு) என சங்ககாலத்தில் அழைத்துள்ளனர். பின்னர் மனிதனுக்குள் ஏற்படுத்தும் அகம் சார்ந்த வியப்புகளைக் குறிக்க ஓவம் என்றாகி, இறுதியில் ஓவியம் என்றும் தமிழர்கள் பெயரிட்டுள்ளனர். ஆகவே, ஓவியம் என்ற சொல் ஓவு, ஓவம், என்ற வேர்ச்சொல்லில் இருந்து உருவாகியுள்ளது.

சமகாலச் சொல்லாக வரைவிக்கும் கலை என்பதால் வரைகலை என்று விவரிக்கப்படுகிறது. இந்த வரைகலை என்ற சொல்லைக் கணினியில் வரையப்படும் ஓவியங்கள், வடிவங்களைக் குறிக்கும் GRAPHICS என்ற ஆங்கிலச் சொல்லிற்குத் தமிழ்ச்சொல்லாக வரைகலை என்ற சொல்லைப் பயன்படுத்தலாம்.

## படம்

ஓவியத்தை எழுத்து என்றும், படம் என்றும் அழைத்துள்ளனர். படம் என்ற சொல் படாம் என்ற சொல்லில் இருந்து தோன்றியுள்ளது. படாம் என்றால் துணி எனப் பொருள். துவக்கத்தில் துணிகளில் அதிகமாகப் படம் வரையப்பட்டதால் துணியில் வரையப்படும் வடிவமும் துணியின் பெயரிலேயே படாம் என்றே அழைக்கப்பட்டது. படாம் என்ற சொல் மறுவி படமாக மாறியது. அதனால்தான் துணியில் (திரைச்சீலையில்) காண்பிக்கப்படும் நிழல் வடிவங்களும் படம் என்றும் திரைப்படம் என்றும் அழைக்கப்பட்டன.

## ஓவியர்கள்

ஓவியக்கலையில் சிறப்புப் பெற்றவர்களை ஓவியர், வித்தகர், ஓவமாக்கள், கண்ணுள் வினைஞர், வல்லோன், சித்திரகாரி,தச்சன் என அழைத்துள்ளனர்.

வட்டிகை மணிப் பாகை வண்ண நுண் துகிலிகை
இட்டிகை நுடங்க நொந்திரியலுற்ற மஞ்சையில்
கட்டழலுயிர்ப்பின் வெந்து கண்ணிதீந்து பொன்னுக
மட்டவிழ்ந்த போதைமார்கள் வந்துவாயில் பற்றினார்''

எனவரும் சீவகசிந்தாமணியின் குணமாலையார் இலம்பகப் (256) பாடலில் பட்டிகை மணிப்பலகை சுட்டப்படுகின்றது. மேலும் மகளிர் சிலர் தமது வீடுகளில் வண்ணங்களினாலே சித்திரங்களை எழுதிக்கொண்டு இருந்தபோது தெருவில் நிகழ்ந்த ஒரு காட்சியின் சந்தடியைக் கேட்டுத் தாம் எழுதிய ஓவியங்களை அப்படியே தொட்ட இடத்தில் விட்டுவிட்டுத் தெரு வாயிலில் வந்து நின்றநிலையும் இப்பாடலில் சுட்டப்படுகிறது.

“ஓவியன் உள்ளத்து உள்ளியது வியப்போன்” எனும் கூற்றால் ஓவியர்கள் உள்ளத்தில் எழுகின்ற உணர்ச்சிகளை வடிவமாக்கக் கூடிய வல்லமையுடையோர் என்பது விளக்கப்படுகிறது.

## ஓவிய வரைபொருட்கள் – தூரிகை (BRUSH)

பழங்காலத்தில் ஓவியர்கள் அணில், குதிரை போன்றவற்றின் முடிகளை ஒரு குச்சியில் கட்டி அதனைப் பயன்படுத்தி படம் வரைந்ததனை அறிய முடிகிறது. அவை தூரிகை, துகிலிகை, வட்டிகை என்று குறிப்பிடப்பட்டுள்ளன.

## வண்ணக் குழப்பித் தட்டு (PALATE)

வண்ணங்களைக் குழப்பி வரைபரப்பில் தீட்டிடப் பயன்படும் தட்டானது மணிப்பலகை என அழைக்கப் படுகின்றது. இதேபோல், மேலும் பல நிலைகளில் ஓவியக்கலையில் பயன்படுத்தப்படும் கலைச் சொற்களுள் சிலவற்றை இங்குக் காண்போம்.

| | | |
|---|---|---|
| உடலோவியம் | – | Datoo |
| உருவங்கள், உருவப்படங்கள் | – | Form |
| எழுத்து | – | script |
| எழுத்துப்புடவை, எழுத்துச்சீலை | – | Drawing sari |
| எழுதுப்படம் | – | Painting |
| ஒளி | – | Light |
| ஒருமுக எழினி | – | Screen |
| கருங்கச்சு | – | Black dye |
| கட்டங்கள் | – | Boxes |
| கலைஞர்கள் | – | Artists |
| கலைப்பாணி | – | Style |
| காட்சி | – | Visual |
| சிற்றூர் (கிராமிய) ஓவியம் | – | Folk Art |
| கீற்றுவரி | – | Carving line |
| குழம்பு | – | Paste |
| கொடி, கொடிச்சீலை | – | Flag |
| கொடிக்கருக்கு | – | Flower Design |
| கோடு | – | Line |
| கோட்டுருவம் | – | Figure |
| சாயம் | – | Ink |
| சித்திரம் | – | Drawing |
| சித்திரவேலை | – | art and Craft |
| சித்திரச் செய்கைப் படம், சித்திரப்படம் | – | Cloth Painting |
| சிற்பிகள் | – | Sculpture |
| சிற்பக்கலை | – | Sculptures |
| சின்னங்கள் | – | Symbols |
| சுவர் | – | Mural |
| செம்மை | – | Red shade |
| செதுக்குதல் | – | Carving |
| சொக்கட்டான் | – | Black colour Produce seed |
| நிழல் | – | shade |
| நிழற்படம் | – | Photo copy |
| நிறம் | – | colour |
| தீட்டு | – | Sharp |
| தொய்யில் மகளிர் | - | Datoo girls |
| படாம் | – | Cloth |
| பச்சைப்படாம் | – | Skin Picture |
| புட்டா | – | Design |
| புள்ளி | – | Dot |
| புனையா ஓவியம் | – | Line Drawing |
| பூத்தொழில் | – | Flower craft |
| பூம்படம் | – | Flower drawing |
| மாதிரி | – | Tracing Design |
| மாறாத வண்ணம் | – | Permanent colours |

இவ்வாறான கலைச்சொற்களை அறிந்து கொள்வதின் மூலம் நவீன கலைத்துறையில் தமிழ்ச் சொற்களின் பயன்பாட்டை உறுதிபடுத்திட முடியும்.

முனைவர் கு.கவிமணி,
உதவிப்பேராசிரியர்,
அரசு கவின்கலைக் கல்லூரி,
சென்னை.

# ஆரோக்கிய வழியில் சித்த மருத்துவம்

நம் இந்திய தாய்த்திருநாட்டின் பாரம்பரிய மருத்துவ முறைகளில் ஒன்றான சித்த மருத்துவம் மிகவும் தொன்மையான மருத்துவம் ஆகும். இம்மருத்துவம் நம் வாழ்வியலோடு இயைந்த ஒன்று.

எண்பெரும் சித்திகளைக் கைவரப்பெற்ற சித்தர்களால் அருளப்பெற்ற மருத்துவமே சித்த மருத்துவம். மெய்ஞ்ஞானம் அடைவதே சித்தர்களின் நோக்கம். அந்நோக்கத்தை அடையும் பொருட்டு, சித்தர்கள் தவ வழியை மேற்கொண்டனர். மேற்கொண்ட தவ வழியில், தவ வலிமையால் தங்களது அருள் ஞானஅறிவால் உணரப்பட்ட கருத்துகளே, தத்துவங்களே இவ் அண்டம் (Milky way Galaxy), பிண்டம் (Human Body) பற்றிய கருத்துகளாகும். இக்கருத்துகளில் மெய்ஞ்ஞானம், விஞ்ஞானம், உடல் தத்துவம், உயிர்த்தத்துவம், வானவியல், சோதிடம், சாஸ்திரம், பஞ்சபட்சி, சரம், நாடி, வர்மம், யோகம், காயகற்பம், மணி, மந்திரம், அவிழ்தம் மற்றும் முப்பு ஆகியன அடங்கியுள்ளன. இத்தத்துவங்கள் இன்றைய விஞ்ஞான உலகிலும் நிலைபெற்றுள்ளன.

உடலானது 96 தத்துவங்களைக் கொண்டது. அவற்றில் வாதம், பித்தம், கபம் என்ற முக்குற்றங்களும் சாரம், செந்நீர், ஊண், கொழுப்பு, என்பு, மூளை மற்றும் சுக்கிலம் ஆகிய 7 உடல் தத்துவங்களும் முக்கியமான தத்துவங்கள். 96 தத்துவங்களைக் கொண்ட யாக்கைக்கு, அழிவு ஏற்படின் மெய்ஞ்ஞானத்தினை அடைய இயலாது. இதனையே திருமூலர்,

“உடம்பார ழியிலு யிரா ரழிவர்
திடம்பா மெய்ஞ்ஞானஞ் சேரவுமாட்டார்
உடம்பை வளர்க்கு முபாய மறிந்தே
உடம்பை வளர்த்தே னுயிர் வளர்த்தேனே”

என்றார்.

உலக இன்பங்களை நுகர்வது உயிருடன் கூடிய உடலாகும். உலக இன்பங்களை நுகர்வதற்கும் மெய்ஞ்ஞானத்தை அடைவதற்கும் உயிருடன் கூடிய உடலானது அவசியம். எனவே உடலினைப் பாதுகாத்து ஓம்புதல் இன்றியமையாதது ஆகும். உடலானது ஆரோக்கியமாக இயங்க வாதம், பித்தம், கபம் என்ற முக்குற்றங்கள் தத்தம் நிலையில் இருக்கவேண்டும். இதனையே கண்ணுசாமியும்,



மரு.கே.வெண்ணிலா
விரிவுரையாளர், குழந்தை மருத்துவத்துறை,
தேசிய சித்த மருத்துவ நிறுவனம்,
சென்னை 47.

‘மெய்யளவு வாதமொன்று மேல் பித்தமோரரையாம்
ஐயங்காலென்றே அறி” என்று கூறியுள்ளார்

அதாவது, வாதம், பித்தம், கபம் முறையே 1, ½ , ¼ என்ற அளவில் இயங்கவேண்டும். வாதம் என்பது உடலின் இயக்கம். உடலின் இயக்கம் என்பது நடத்தல், ஓடல் மட்டும் அல்ல. உடலின் ஒவ்வொரு உறுப்புகளின் (இதயம், நுரையீரல், மூளை போன்ற முக்கிய உறுப்புகள்) இயக்கம், 72000 நாடி நரம்புகளின் இயக்கம், உள்ளிடைச் சுரப்புகளின் இயக்கம், விலத்திற்கு (Cell) இடையே நிகழும் மின் துகள்களின் (Ca+,K+ channels opening and closing) இயக்கமும் வாதமே. பித்தமென்பது உயிருக்கு ஆதாரமான உயிரெனல் ஆகும். மேலும் ஒவ்வொரு விலத்திலும் உள்ள உள்ளுறை வெப்பமும் பித்தமே. கபம் என்பது உடலின் நீர்த்தன்மையாகும். நமது உடலானது 60–70% நீர்த்தன்மையால் ஆனது. எனவே இந்த உயிர் தாதுக்களின் மாற்றமே நோய்/பிணி.

சித்தமருத்துவமானது, உடல் நோய்களைப் போக்குவதற்கான வழிமுறைகளை மட்டுமின்றி, உள்ளத்தின் நோய்களைப் போக்குவதற்கான வழிமுறைகளையும், நோய் வராமல் தடுப்பதற்கும், மரணம் வராமல் தடுப்பதற்கும் மேற்கொள்ள வேண்டிய வழிமுறைகளையும் அறிவுறித்தியுள்ளது.

நோய் வந்தபின் மருத்துவம் புரிதலை விட வரும் முன் காப்பதே சாலச் சிறந்தது. நோய் அணுகாமல் காத்துக்கொள்ள தேரன் எனும் சித்தர் “நோய் அணுகா விதி ஒழுக்கம்” என்பதனை வகுத்துள்ளார்.
அதனுள்,

“ஆறுதிங்கட் கொருதடவை வமனமருந் தயில்வோம்
அடர்நான்கு மதிக்கொருகாற் பேதியுறை நுகர்வோம்
தேறுமதி யொன்றரைக்கோர் தரநசியம் பெறுவோம்”

இவ்விதிப்படி,

ஆறு திங்களுக்கு ஒருமுறை வாந்தியும்

நான்கு திங்களுக்கு ஒருமுறை பேதியும்

ஒன்றரை திங்களுக்கு ஒருமுறை நசியமும்

செய்தல் வேண்டும். இப்பிணியணுகா விதிகளான பேதி, வாந்தி, நசியம் இவைகளைக் கடைப்பிடிப்பதால் முறையே வாதம், பித்தம், கபம் ஆகிய முக்குற்றங்களும், மிகாமலும், குறையாமலும், தத்தம் நிலையில் இயங்கும். மேலும், உடலின் நச்சுகள் நீங்கி உடலானது தூய்மை பெற்று, பிணிகள் அணுகாமல் காக்கப்படுகிறது. இம்முறைகளைப் பிணி நிலையில் சிகிச்சையின் முதல் படியாகக் கடைப்பிடிக்கும் பொழுது, பிணிகள் விரைவாகக் குணமடைகின்றன.

பேதி(விரேசனம்), வாந்தி(வமனம்), நசியம் செய்விக்க சித்த மருத்துவத்தில் பலமருந்துகள் கூறப்பட்டுள்ளன. அவற்றினைப் பருவகாலங்களுக்கு ஏற்பவும், உடல் வன்மைக்கு ஏற்பவும் எடுத்துக்கொள்ள வேண்டும். சித்தமருந்துகளின் தத்துவங்களால், உடல் இயங்கியலும் (Physiology) உடலின் நீர் மற்றும் உப்பு சத்துகள் சமநிலையிலும் (Electrolyte balance) இருப்பதற்கான பாதுகாப்பான வழிமுறையாகவே சொல்லப்பட்டுள்ளன.

### விரேசனத்திற்கான வழிமுறைகள்:

- ✶ சூரிய உதயத்திற்கு முன்பு, அதிகாலையில், வெறும் வயிற்றில் எடுத்தல் வேண்டும்.
- ✶ விரேசனத்தைத் தூண்ட இளவெந்நீர் அருந்தவேண்டும்.
- ✶ விரேசனத்தை நிறுத்த மோர், வசம்பு சுட்டகரியைப் பயன்படுத்தவேண்டும்.
- ✶ விரேசனம் எடுத்த தினத்தில் உப்பில்லா மோர் சாதம் உண்ணவேண்டும்.
- ✶ விரேசனம் எடுத்த தினத்தில் இளவெந்நீரில் குளிக்கவேண்டும்.

### வமனத்திற்கானவழிமுறைகள்:

- ✶ சூரிய உதயத்திலிருந்து 3 மணிநேரத்தில் வமனம் செய்வித்தல் வேண்டும்.
- ✶ வமனத்தை நிறுத்த சீரகத்தைத் தேன் விட்டு வறுத்து எலுமிச்சைப் பழச்சாறு சேர்த்துக் குடிநீராக்கிக் கொடுத்தல் வேண்டும்.

### நசியத்திற்கான வழிமுறைகள்

- ✶ சூரிய உதயத்திலிருந்து பதினேழு நாழிகைக்குள் (11–12 மணிக்குள்) செய்வித்தல் வேண்டும்.
- ✶ நசியத்திற்கு முன்பும் பின்பும் முகத்திற்கு இளவெந்நீரால் ஒற்றடம் செய்வித்தல் வேண்டும்.

### இதன் பயன்கள்:

- ✶ உடலில் உள்ள ஆமம் என்ற மந்தத்தை வெளியேற்றுகிறது
- ✶ உடலின் நச்சுக்களை வெளியேற்றுகிறது.
- ✶ உணவின் சாரங்கள் சரியாக உட்கிரகிக்கப்பட்டு, உடல் தாதுக்கள் உரமாக்கப்படுகின்றன
- ✶ நாடி நரம்புகள் புதுப்பொலிவுடன் செயல்படுகின்றன.
- ✶ உடலும் மனமும் நன்நிலையில் இயங்க வழிவகை செய்கின்றது.
- ✶ உடலிற்கும் மனத்திற்கும் புத்துணர்ச்சி அளிக்கின்றது.
- ✶ உடலின் சுத்திகரிப்பு மற்றும் புத்துணர்ச்சியின் மூலம் நோய் தடுப்பாற்றல் பெருகுகின்றது.
- ✶ உடலின் உள்ளுறுப்புகள் சீராக இயங்க உதவுகின்றது.
- ✶ உடலின் அமிலகாரத் தன்மை சீராகச் செயல்பட உதவுகின்றன.
- ✶ குடலில் நன்மை பயக்கும் நுண்ணுயிரிகள் நன்முறையில் செயல்பட வழிவகுக்கிறது.
- ✶ நோயின்றி நெடுநாள் வாழ வழிவகை செய்கிறது.

ஆரோக்கியமாக, இன்பமாக நெடுநாள் வாழ்வதே மனித உயிர்களின் நோக்கமாகும்.

இந்நோக்கம் நிறைவேற, பயணிப்போம் சித்த மருத்துவ வழியில்...

# அகரமுதலி இயக்ககத்தில் துறைசார் வல்லுநர்குழுக் கூட்டங்கள்!



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில் 06.02.2021, 27.02.2021 ஆகிய இருநாள்களில் துறைசார் வல்லுநர் குழுக்கூட்டங்கள் நடைபெற்றன.

இன்றைய கணினி உலகில் நாள்தோறும் பல புதிய புதிய துறைகள் தோன்றி அத்துறை சார்ந்த சொற்களும் உருவாகிவருகின்றன. அப்படி உருவாகும் சொற்களுக்கு உடனுக்குடன் தமிழில் கலைச்சொற்களை வடிவமைத்து, அவற்றை மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டு வர வேண்டும். அவ்வாறு செய்வதனால் மொழிக்கலப்புத் தவிர்க்கப்படுவதோடு, தமிழின் சொல்வளமும் பெருகும்.

அந்தந்தத் துறைசார்ந்தவர்களுக்கே அத்துறைகளில் அடிக்கடி பயன்படுத்தப்படும் சொற்களும், தமிழாக்கம் செய்யப்படவேண்டிய சொற்களும் நன்கு தெரியும் என்பதால், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் துறை சார்ந்த வல்லுநர் குழுக்கூட்டங்கள் நடத்தப்பெற்று வருகின்றன. மேலும், தமிழ்க் கலைச் சொல்லாக்கத்திற்கான தொடர் பணியில் வல்லுநர்களின் துறை சார் புலமையை இவ்வியக்ககம் தொடர்ந்து பயன்படுத்திக் கொள்ளவும் இத்தகைய வல்லுநர்குழுக் கூட்டங்கள் வாய்ப்பாக அமைகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

அந்தவகையில், பட்டினப்பாக்கம், எம்.ஆர்.சி. நகரிலுள்ள நகர் நிருவாக அலுவலக வளாகத்தின் முதல் தளத்தில் அமைந்துள்ள அகரமுதலி இயக்ககத்தில் 06.02.2021 காரிக்கிழமையன்று ஊடகத்துறை வல்லுநர் குழுக்கூட்டம் நடைபெற்றது. செய்தி மக்கள் தொடர்புத்துறை இயக்குநர் திரு.தெ.பாஸ்கர பாண்டியன் இ.ஆ.ப., அவர்கள் தலைமைவகித்துத் தொடங்கிவைத்த இக்கூட்டத்தில் தமிழ்நாட்டிலுள்ள முன்னணி ஊடகத்துறையிலிருந்து 15வல்லுநர்கள் பங்கேற்று, மொழிக்கலப்பில்லாத தமிழ்க்கலைச்சொற்களை மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுசெல்வதில் ஊடகங்களின் பங்களிப்பு பற்றியும், தமிழாக்கம் செய்யப்படவேண்டிய ஊடகத்துறை சார்ந்த சொற்கள் பற்றியும் எடுத்துரைத்தனர்.

இதேபோல் 27.02.2021 காரிக்கிழமையன்று தமிழமைப்பினர் கலந்துகொண்ட பலதுறை வல்லுநர்குழுக் கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் திருக்கோவலூர் செந்தமிழ்ச் சங்கம், தியாக துருகம், ஔவைத் தமிழ் அமைப்பு, இராமநாதபுரம் தமிழ்ச் சங்கம், திருவாரூர் இலக்கிய வளர்ச்சிக் கழகம், காஞ்சிபுரம் ஐந்திணை கலைப்பண்பாட்டு இணையம், திருவாரூர் முத்தமிழ்ப் பண்பாட்டுப் பாசறை, பண்ணுருட்டி செந்தமிழ்ச் சங்கம், சென்னை பள்ளிக்கரணை வினைத்தமிழ் இயக்கம், சென்னை மின் இலக்கியப் பூங்கா, மறைமலையடிகள் கல்வி அறக்கட்டளை, சின்ன சேலம் தமிழ்ச் சங்கம், கல்லைத் தமிழ்ச் சங்கம், ஈக்காட்டுத் தாங்கல் அமிழ்தத் தமிழ் ஆய்வரங்கம், மண்ணூர்ப்பேட்டை தமிழகக் கவிஞர் கலை இலக்கியச் சங்கம் உள்ளிட்ட தமிழமைப்புகளைச் சார்ந்த பொறுப்பாளர்கள் கலந்துகொண்டார்கள்.

இவ்விரு வல்லுநர்குழுக் கூட்டங்களில் கீழ்க்காணும் தீர்மானங்கள் வேண்டுகோள்களாக முன்வைக்கப்பட்டன.

- ஊர்ப்புறங்களிலும் தூயதமிழை வளர்க்க வேண்டும்

- ✶ குழந்தைகளிடையேயும் பள்ளி மாணவர்களிடையேயும் தமிழைக் கொண்டு செல்ல வேண்டும்
- ✶ தனித்தமிழ் புரட்சியின் இருபதாம் நூற்றாண்டில் இளைஞர்கள் அனைவரும் சாதித்துக் காட்ட உறுதியேற்க வேண்டும்
- ✶ தமிழி என்ற சொல்லைத் தமிழ் நாட்டின் சிறந்த சொல்லாக்க வேண்டும்
- ✶ தமிழையும் தமிழ் சார்ந்த இயற்கை வளங்களையும் பாதுகாக்க வேண்டும்
- ✶ தமிழ்நாட்டில் உள்ள அனைத்துச் சாலைகளுக்கும் தமிழறிஞர்களின் பெயர்களைச் சூட்ட வேண்டும்
- ✶ கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் தூயதமிழ் பேசும் மாணவர்களுக்கு அகமதிப்பீட்டு மதிப்பெண்களில் பத்து மதிப்பெண்கள் கூடுதலாக வழங்க வேண்டும்.
- ✶ பள்ளி, கல்லூரிப் பாடத்திட்டத்தில் கலைச் சொல்லாக்கத்தினைத் தனிப் பாடமாகச் சேர்க்க வேண்டும்
- ✶ மாணவர்களுக்குக் குறைந்த விலையில் தமிழ் அகராதிகளை வழங்க வேண்டும்
- ✶ பள்ளி மற்றும் கல்லூரிகள்தோறும் அகரமுதலி இயக்ககத்தின் வெளியீடுகள் அனைத்தும் இருப்பதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும்
- ✶ சித்த மருத்துவக் கலைச்சொற்களைத் தூயதமிழ்ச் சொற்களாக மாற்ற வேண்டும்
- ✶ இனிப்பகங்களில் உள்ள உணவுப் பொருள்களின் பெயர்களை இனிமையான தமிழ்ப்பெயர்களாக மாற்ற வேண்டும்
- ✶ அகரமுதலிஇயக்ககத்தின்தமிழ்ப்பணிகளில் தமிழமைப்புகளின் பங்களிப்பையும் பயன் படுத்திக் கொள்ளும் வகையில் அரசாணை பிறப்பிக்க நடவடிக்கை எடுக்க வேண்டும்
- ✶ தூயதமிழ் பரப்பும் அகரமுதலி இயக்ககத்தின் நோக்கம் வெற்றியடைவதற்கேதுவாக, ஆண்டுதோறும் மாவட்டத்திற்கு ஒரு தமிழமைப்பினைத் தகுதியின் அடிப்படையில் தேர்ந்தெடுத்து விருது வழங்க வேண்டும்
- ✶ ஊடக நிறுவனங்களில் பணிபுரிய எண்ணுவோருக்கும் பணிபுரிவோருக்கும் தூயதமிழ் குறித்து அகரமுதலி இயக்ககம் வாயிலாகப் பயிற்சியளித்து, சான்றிதழ்கள் வழங்க வேண்டும்
- ✶ பிறமொழிக் கலப்பில்லாத தூயதமிழ்ச் சொற்களைப் யன்படுத்திக் குழந்தைகளுக்குத் தமிழ் கற்பிக்கத் துணை செய்யும் வகையில் தொடக்கப்பள்ளி ஆசிரியர்களுக்கு அகரமுதலி இயக்ககம் வழியாகப் பயிற்சியளிக்க வேண்டும்
- ✶ திரைப்படத் தணிக்கைத்துறையின் மொழிப்பிரிவில் அகரமுதலி இயக்ககம் உறுப்பினராவதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இந்த இரு வல்லுநர்குழுக் கூட்டங்களிலும் அகரமுதலி இயக்கக இயக்குநர் திரு.தங்க. காமராசு அவர்கள் நோக்கவுரையாற்ற, திட்ட ஒருங்கிணைப்பாளர் திருமதி.ஜெ.சாந்தி நன்றியுரை கூறினார்.



# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலித் திருந்திய பதிப்பின் தோற்ற வரலாறும் வெளியீடும்

தமிழ்மொழியில் நிகண்டுகள் பல தோன்றிச் சொற்களுக்குப் பொருள் கூறும் பணியாற்றி வந்திருந்தாலும் வீரமாமுனிவரின் சதுரகராதி வந்த பின், அகராதியியல் தமிழ்மொழிக்குப் புதிய வரவு என்பர். அதேபோல் தொல்காப்பியம், ‘எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே’ என்ற நூற்பாவை உள்ளடக்கி, பொருளியல், உயிரியல் என்ற தலைப்புகளில் சொற்களுக்கான மூலவேர்ப் பொருளைக் கூறியிருந்தாலும், சொற்பிறப்பியல் தமிழ் மொழிக்குப் புதிய வரவு என்றே கொள்ளப்படுகிறது.

ஞானப்பிரகாச அடிகளார், மாகறல் கார்த்திகேயனார் ஆகியோர் தமிழ்மொழிச் சொற் பொருள் தோற்றத்தையும் வேர்மூலத்தையும் கண்டறிய முற்பட்டிருந்தாலும், தமிழ் மொழியில் உள்ள அனைத்துச் சொற்களுக்கும் வேர்மூலத்தைக் காட்ட முடியும் என்று கூறி சொற்பிறப்பியல் அகராதிக்காகவே பணியைத் தொடங்கியவர் ‘மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்’ ஆவார்.

அப்பெரும் பணிக்காகத் தமிழறிஞர் பலரின் கோரிக்கையை ஏற்று, தமிழக அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்கத்திற்கென்றே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தை உருவாக்கி அதற்குத் தேவநேயப் பாவாணரை முதல் இயக்குநராக்கியது.

1974 மே 8–ஆம் நாள் தொடங்கப்பட்ட இந்த இயக்ககம் 31 தொகுதிகள் அடங்கிய சொற்பிறப்பியல் அகரமுதலிகளை வெளியிடத் திட்டமிட்டு, பணியை முன்னெடுத்தது. அகர எழுத்தில் தொடங்கிய முதல் தொகுதி முடிந்து இரண்டாம் தொகுதி பணி நடந்துகொண்டிருக்கும்போதே தேவநேயப் பாவாணரின் வாழ்நாள் முடிவெய்தியது. அவரின் வாழ்நாள் நிறைவடைந்தாலும் அவரின் பணி நிறைவடையாமல் இடை நின்றது. நல்ல வேளையாக அவர் எழுதி வெளியிட்ட ஐம்பதுக்கும் மேற்பட்ட நூல்களில் தமிழ்ச் சொற்கள் பலவற்றிற்கும் வேர்மூலம் கண்டதைப் பதிவு செய்திருந்தார். அவற்றினடிப்படையில் சொற்பிறப்பியல் பேரகரமுதலி உருவாக்கப்பணி பின் வந்தவர்களால் தொடர்ந்தது.

உயிரெழுத்துகள், உயிர்மெய்யெழுத்துகள் எனத் தொடங்கிய தொகுதிகள், இணைப்பு மடலத் தொகுதிகள், அயற்சொல் மடலத் தொகுதிகள், அகரமுதலி வரலாறு, சொற்பிறப்பியல் நெறிமுறைகள் என 31 தொகுதிகள் அடங்கிய சொற்பிறப்பியல் அகர முதலியின் மொத்தத் தொகுதிகளையும் உருவாக்கும்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

பணி அது தொடங்கிய 38 ஆண்டுகளில், அதாவது 2011–இல் நிறைவெய்தியது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் முதல் தொகுதி 1/4 மணிமுடி (1/4 crown) அளவில் கைக்கோப்பு அச்சுமுறை (Hand composing) யில் அச்சிடப்பட்டு வெளிவந்தது. அதே அளவில் முதல் நான்குத் தொகுதிகள் வெளிவந்த பின் மீதி அனைத்துத் தொகுதிகளும் பெரிய அளவிலான 1/4 தெம்மி (1/4 demmy) அளவில் வெளிவந்தன.

அவ்வாறு வெளிவந்த தொகுதிகள் ஒரே அச்சுத் தொழில் முறையில் அல்லாது, நூல் அளவிலும் ஒரே அளவில்லாது, அச்செழுத்து உருக்களும் ஒரு சீரமைப்பில் அல்லாது வெளிவந்திருந்தன.

அவற்றை ஒரு சீரெழுத்து அமைப்பிலும் நூல் தொகுதிகளை ஒரே அளவிலும் அமைத்து, விடுபட்ட சொற்களை இடம்பெறச் செய்து திருந்திய பதிப்பாக வெளிவர வேண்டும் என்று அரசிடம் இயக்ககம் ஒப்புதல் கேட்டிருந்தது.

அரசும் ஒப்புதல் அளித்தது. பல்வேறு அச்சு முறைகளால் 13,327 பக்கங்களில் அச்சிடப் பெற்றிருந்த 31 தொகுதிகள் முழுவதும் கணிப்பொறி அச்சு முறையில் கணினியச்சு செய்யப்பட்டன. ஒரே சீரான எழுத்துருவில் கணினியச்சு செய்யப்பட்ட அனைத்துப் பக்கங்களும் மெய்ப்புப் பார்க்கப்பட்டன. ஒரே கோணத்தில் இயக்ககப் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள் மெய்ப்புப் பார்த்த நிலையில் புற அறிஞர்களிடமும் மெய்ப்புப் பார்க்க அனுப்பப்பட்டது.

அனைத்தும் முடிந்த பின் 8,060 பக்கங்களாக அது நிறைவெய்தியது. அப்பக்கங்கள் ஏழு தொகுதிகளாகப் பிரிக்கப்பெற்றன. அத்தொகுதிகளை எளிதாக வேறுபடுத்தி அறிய ஏதுவாக அவற்றின் மேலட்டைகள் ஒவ்வொன்றும் வானவில்லின் ஒவ்வொரு நிறத்தில் வடிவமைக்கப்பட்டிருக்கின்றன.

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் சிறப்புகள் :**

- ✶ சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதி (Tamil Lexicon) க்குப் பின் வெளிவந்த தமிழுக்கான பேரகராதி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியே.
- ✶ இந்திய மொழிகளில் சொற்பிறப்பியலை அடிப்படையாகக் கொண்டு வெளிவந்த முதல் நூல் தமிழில் வெளியான செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி.
- ✶ பொதுவாக, பேரகரா திகளை (Lexicon) கல்வி நிறுவனங்கள் மட்டுமே உருவாக்கி வெளியிடும் நிலையில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியை ஓர் அரசே உருவாக்கி வெளியிட்டது.

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் திருந்திய பதிப்பின் சிறப்பியல்புகள் :**

- ✶ 38 ஆண்டுகள் பணி செய்து 13,327 பக்கங்கள் கொண்ட 31 தொகுதிகளாக வெளிவந்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் தொகுதிகள் குறுகிய காலத்தில் முழுவதும் கணினியச்சு செய்யப்பட்டு, தேவையற்ற சொற்களை நீக்கியும், விடுபட்ட சொற்களைச் சேர்த்தும், பொருள் மாற்றங்கள் செய்தும், பிழைகளை நீக்கியும், 8,060 பக்கங்களாக வடிவமைத்து இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப்பதிப்பாசிரியர், தொகுப்பாளர்களால் பிழை திருத்தப்பட்டு அதன்பின் புற அறிஞர்களாலும் கூர்ந்தாய்வு செய்யப்பட்டு, அந்தத் திருத்தங்களும் ஏற்றப்பட்டு, இறுதி மெய்ப்பில் பிழைகளைச் சரிபார்த்து இறுதிபடுத்தப்பட்டது.
- ✶ ஏழு தொகுதிகளும் வானவில்லின் ஏழு நிறங்களில் வடிவமைக்கப்பட்டு, ஆக்சுபோர்டு அகராதிகளுக்கு நிகராக அட்டைப்படம் உட்பட அனைத்தும் வடிவமைத்துக் கட்டமைக்கப்பட்டன.
- ✶ சிறப்பாக வடிவமைக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திருந்திய பதிப்பின் 8,060 பக்கங்களைக் கொண்ட ஏழு தொகுதிகளை மாண்புமிகு செய்தித்துறை அமைச்சர், தமிழ்வளர்ச்சித்துறை அமைச்சர், தலைமைச் செயலாளர், தமிழ்வளர்ச்சித்துறை அரசு செயலாளர், செய்தித்துறை இயக்குநர் ஆகியோரின் முன்னிலையில் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள் வெளியிட்டார்கள்.

# தூயதமிழ் செழிக்க மாணவர்கள் கூடிய தூதுவர் கூடல்

## முன்னுரை

தமிழகஅரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் கூட்டிய சொற்குவை மாணவத் தூதுவர்கள் கூடல் மிகவும் பயனுள்ளதாகவும் வியக்கத்தக்கதாகவும் இருந்தது. இக்கூடலில் தமிழ் அறிஞர்கள் ஊக்கமூட்டும் வகையில் உரையாற்றினர். மொழி, சொல், இலக்கணம், மொழிபெயர்ப்பு எனப் பல்வேறு சிறப்பான தரவல்களோடு விளக்கி விரிவுரையாற்றினர். அக்கூடல் குறித்த கருத்துகளை ஒரு சிறிய கட்டுரையாகக் காண்போம்.

## மொழியும் பயனும்

மொழி என்பது கருத்துப் பரிமாற்றத்திற்கான கருவியாக விளங்குகிறது. மனிதனின் ஆசைகள், சிந்தனைகள் மற்றும் எண்ணங்களை வெளிப்படுத்த உதவுகிறது. மொழி சமுதாயத்தோடு தொடர்பு கொள்ள பயன்படுகிறது. மொழி சமுதாயம் சார்ந்தது, மொழி இல்லையேல் சமுதாயம் இல்லை, அம்மொழியானது பேச்சு வழக்கு மற்றும் எழுத்து வழக்கு என இருவகையாகப் பிரிக்கப்படுகிறது. தோடர், கோத்தாரி, நரிக்குறவர் போன்றோரின் மொழிகளுக்குப் பேச்சுவழக்குமட்டும் உண்டு. பேச்சு வழக்கு மற்றும் எழுத்து வடிவம் எனஅனைத்தும் கொண்ட மொழிகளுள் சில தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், உருது, அரபு முதலியன. மொழி மனிதனைப் பிறஉயிர்களிடத்தில் இருந்து வேறுபடுத்திக் காட்டுவது ஆகும். மொழியை அடிப்படையாகக் கொண்ட மொழியியல் துறையானது, மொழியின் தோற்றம், வளர்ச்சி போன்றவற்றைக் குறித்து விளக்குகிறது. மொழியியல் இரு பிரிவுகளைக் கொண்டது. அவை, கோட்பாட்டு மொழியியல் மற்றும் பயனாக்க மொழியியல் ஆகும். கோட்பாட்டு மொழியியல் ஐந்து வகைப்படும். அவை, ஒலியியல், ஒலியனியல், உருபனியல், தொடரியல் மற்றும் பொருண்மையியல். இவ்வாறாக மொழியியலையும் அதன் பிரிவுமற்றும் வரலாறு, பயன்கள் குறித்தும் முனைவர் இந்திராபிரியதர்சினி அவர்கள் ஊக்கமுடன் உரையாற்றினார்கள்.

## சொல்லும் பொருளும்

அடுத்ததாக, சொற்களைக் குறித்த



ர. ஜனனி
நுண்ணுயிரியல்
மகாலட்சுமி மகளிர் கலை மற்றும் அறிவியல்கல்லூரி,
ஆவடி , சென்னை

விளக்கவுரையை வழங்கினார் முனைவர் மா.பூங்குன்றன் ஐயா அவர்கள். சொல்லுதலுக்குச் செப்புதல், பறைதல், அறைதல், விளம்புதல்எனப் பல்வேறு பெயர்களும் உள்ளன என்று விளக்கினார். கல் என்ற ஒரு பொருளையே சிறுவர், பெரியவர் மற்றும் மண்ணியல் அறிஞர்கள் மூவரும் வெவ்வேறு கோணத்தில் காண்பர் என்றும், சொல் இருவகைப் பண்பில், ஒலியாகவும் மற்றும் பொருள் தருவதாகவும் பிரிக்கப்படுகிறது, வேர்ச்சொல் என்பது ஒருசொல்லுக்கான மூலப்பொருளைத்தருவதுஎன்றும், அச்சொற்களைத் தொகுத்துச் சொற்பிறப்பியல் அகரமுதலியாக உருவாக்கியவர் தேவநேயப்பாவாணர் என்றும் தன் உரையில்கூறினார். உழவுத்தொழிலை அடிப்படையாகக் கொண்ட சொற்கள் உள், உளி, உழை, பள், பள்ளுதல், வளர்ச்சி, விளைவு, உழைப்பு, வேல், வேலி, வேலை, கூலம், கூலி, சம்பளம் = சம்பா + அளம் ஆகியன ஆகும். ஒரு பகுதியில் விளைந்தபயிரை வரிந்து கட்டுவதுதான் வரி ஆகும். மொழியின் பயன்கள்மிகவும் இன்றியமையாதது. புதியசொற்களை அனைவருக்கும் அறிமுகம் செய்தல், மொழியைக் கையாள அனைவருக்கும் வாய்ப்பு எனப் பல கருத்துகளைத் தொகுத்துஉரையாற்றினார்.

## இலக்கணமும் தமிழும்

தமிழ் மொழியின் இலக்கணம் மிக மிக எளிமையானது. அது மிகவும் இனிமையானது. தமிழ்

ஓர் இயற்கை மொழி, அறிவியல் மொழி ஆகும். தமிழ் ஓர் உடற்கூறியல்மொழி என்றும், தமிழின் இனிமையையும் தமிழ் இலக்கணத்தின் பெருமை மற்றும் எளிமையையும் மிகவும் எளிமையாக விளக்கினார் புலவர் வெற்றியழகனார். ஆரியம், பாலி, கிரந்தம், பிராகிருதம் மற்றும் தமிழ் ஆகியன தொன்மைமொழிகளாகும்என்றும், தமிழ்மொழியில் புணர்ச்சி இலக்கணமானது இயல்பு, விகாரம் (கெடுதல், திரிதல், தோன்றல், உடம்படுமெய்) என வகைப்படும் என்று விரிவாக்கம் செய்தார்.

### மொழிபெயர்ப்பு மற்றும் பலன்கள்

தமிழ்வளர்ச்சியில் மொழிபெயர்ப்பின் பங்கு இன்றியமையாதது ஆகும். இது மூலமொழி மற்றும் இலக்கு மொழி என இரு மொழிகளைக் கொண்டது. மொழிபெயர்ப்பு என்பது ஒரு கலை. அது கி.மு.240–இல் கிரேக்க மொழியில் முதலில் தோன்றியது. இந்தியாவில் முதலில் மொழிபெயர்க்கப்பட்ட நூல் விவிலியம் ஆகும். மொழி பெயர்ப்பின் தேவைகள் கருத்துகளை உலகமயமாக்குதல் ஆகும் என்று விளக்கி உரைத்தார், இளவேனில் முல்லை அவர்கள். இது மொழியின் இனிமைமற்றும் பொருள்குறையாது இருக்க வேண்டும். தமிழ்வளர்ச்சியில் கலைச் சொற்களை உருவாக்குவதே இதன் சிறப்பாகும். இது ஊடகத் துறையின் வளர்ச்சிக்கு இன்றியமையாப் பங்கு அளிக்கிறது என்று விளக்கினார்.

### முடிவுரை

இவ்வாறாக, சொல், மொழி, இலக்கணம், மொழிபெயர்ப்பு குறித்து அனைத்துப் புதுமையான கருத்துகளையும் தெரிந்து கொண்டதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம். இந்நிகழ்வு தமிழ் மொழி மீது அதிகப் பற்றினை உருவாக்கும்படி அமைந்தது.

வாழ்கதமிழ்! வளர்கதமிழ்!

## மாணவர்கள் உருவாக்கிய புதிய கலைச்சொற்கள்

சொற்குவை மாணவ பயிற்சியில் பங்கேற்ற 200 மாணவர்கள் 1081 தமிழ்க் கலைச் சொற்களை வழங்கினார்கள். அவற்றில் 77 கலைச் சொற்கள் வல்லுநர் குழுவால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அவற்றிலிருந்து சிறந்த கலைச் சொற்களாக 3 சொற்கள் தேர்வு செய்யப்பட்டன. அச்சொற்கள்:–



த.ப. சூரியா



ஜ.பவித்ரா



மு.வசுந்தரா நந்திதா

| மாணவர் /மாணவியர்பெயர் | ஆங்கிலச் சொல் | தமிழ்க்கலைச்சொல் |
|---|---|---|
| த.ப. சூரியா<br>முனைவர்பட்ட ஆய்வாளர் மாநிலக் கல்லூரி, சென்னை | Presense of Mind | நொடியுணர் நுண்திறன் |
| ஜ. பவித்ரா<br>முதுகலைத் தமிழ், செல்லம்மாள் கல்லூரி | Hair Driyer | குழல் உலர்த்தி |
| மு.வசுந்தரா நந்திதா<br>கணினிப் பயன்பாட்டியல்<br>மகாலட்சுமி மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, ஆவடி | EarPhone | கேள்பொறி |

## ரிபெல் முத்துராமலிங்க சேதுபதி (1760–1809)

இராமநாதபுரம் செல்லமுத்து சேதுபதி மன்னரின் சகோதரி மகனாக 30.03.1760–இல் இராமநாதபுரம் அரண்மனையில் முத்துராமலிங்க சேதுபதி பிறந்தார். இவர் சிறுவயதிலேயே கி.பி. 1762–இல் பட்டம் சூட்டப்பட்டதால் இவரது அரசப்பிரதிநிதியாக இவரது தாயார் முத்துத் திருவாயி நாச்சியார் பொறுப்புகளை ஏற்று நிருவாகத்தை நடத்தி வந்தார்.

ஆற்காடு நவாபின் ஆதிக்கம் இராமநாதபுரம் சீமையில் நுழைவதை இளம் மன்னர் முத்துராமலிங்க சேதுபதி எதிர்த்தார். இதனால் பன்னிரண்டே வயது நிறைந்த இளம் மன்னரான முத்துராமலிங்க சேதுபதியையும், அவரது தாயாரையும், பிரதானி பிச்சைப் பிள்ளையையும் கைதிகளாக்கி திருச்சிக் கோட்டை அந்நியர்கள் சிறையில் அடைத்தனர்,

மண்ணின் மைந்தரான சேதுபதி மன்னர் சிறைப்படுத்தப்பட்ட பின்னர் ஆற்காடு நவாப் அரசைக் கைப்பற்றி இராமநாதபுரம் மண்ணில் பல எதிர்பாராத மாற்றங்களைச் செய்தார்.

நவாபின் செயல்களால் பொறுமையிழந்த மக்கள் அவரது ஆட்சிக்கு எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். பாளையக்காரர்களும் நவாபின் ஆட்சிக்கு எதிராகக் கிளம்பினர். சிவகங்கையை ஆண்ட மன்னரும் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார்.

இந்தச் சூழ்நிலையிலிருந்து நவாபின் ஆட்சி பிழைக்க வேண்டுமானால் இளவரசர் முத்துராமலிங்க சேதுபதியை இராமநாதபுரத்தின் மன்னராகக் கொண்டு வருவதைத் தவிர வேறு வழியில்லையென எண்ணினார். சிறையில் அடைக்கப்பட்டிருந்த முத்துராமலிங்க சேதுபதியைச் சிறையினின்று விடுவித்து இராமநாதபுரத்திற்கு அழைத்து வந்தனர். பின்னர் சேதுபதி மன்னராக முடிசூட்டிக் கொண்டார்

இவர் ஆங்கிலேயர் ஆட்சியை எதிர்த்ததன் காரணமாகப் பல்வேறு குற்றச்சாட்டுகளைக் கூறி முத்துராமலிங்க சேதுபதி நேரில் ஆஜராக வருமாறு திருநெல்வேலி மாவட்ட கலெக்டர் சம்மன் அனுப்பினார்.

“பிழைப்பு நடத்த வந்த வியாபாரி எனக்கு எப்படி சம்மன் அனுப்புவது” என்று அந்த விசாரணையை முத்துராமலிங்க சேதுபதி புறக்கணித்தார். அடுத்து சென்னை கோட்டையில் இருந்த கம்பெனி கவர்னர் கலெக்டர் அனுப்பியபடி அவர் முன்பு ஆஜராகும்படி சேதுபதி மன்னருக்கு ஆணையிட்டார். அதையும்



சேதுபதி மன்னர் பொருட்படுத்தவில்லை. இதனால் ஆத்திரம் அடைந்த ஆங்கிலேயர் அவரை ரிபெல் முத்துராமலிங்க சேதுபதி என்று கோபத்துடன் கூறினார். (ரிபெல் என்றால் கலகக்காரன் என்று பொருள்)

சேதுபதி மன்னரைப் பிடித்து திருச்சியில் சிறை வைத்தனர். இதை அறிந்த மக்கள் கொதித்தெழுந்தனர் நாட்டில் எங்கும் கிளர்ச்சிகள் தோன்றின.

சேதுபதி மன்னரைத் திருச்சி கோட்டையில் வைத்திருப்பது தங்களுக்குக் கேடு விளைவிக்கும் என அஞ்சிய ஆங்கிலேயர்கள் பின்னர் அவரைச் சென்னையில் உள்ள செயின்ட் ஜார்ஜ் கோட்டையின் வளாகத்தில் சிறை வைத்தனர். பதினான்கு ஆண்டுகள் எவ்வித விசாரணையும் இல்லாமல் குற்றச்சாட்டும் கூறாமல் சென்னை கோட்டைக்குள் சிறை வைக்கப்பட்டார் சேதுபதி மன்னர்.

அந்நியர் ஆதிக்கத்தைத் தனது உயிருள்ளவரை எதிர்த்த மன்னர் ரிபெல் முத்துமராமலிங்க சேதுபதி 23.1.1809 அன்று தன்னுடைய 49–ஆவது வயதில் காலமானார்

நாட்டு மக்களின் நலனுக்காகப் போராடி, நாட்டிற்காகவே மறைந்த முத்துராமலிங்க சேதுபதியின் தியாகத்தைப் போற்றி அவரது நினைவை போற்றும் வகையில் அஞ்சல்தலை வெளியிடப்பட்டது

தமிழ்நாடு அரசின் சார்பில், இராமநாதபுரம் மாவட்டத்தில் ரிபெல் முத்துராமலிங்க சேதுபதி அவர்களின் பிறந்தநாள் விழா ஆண்டுதோறும் மார்ச்சு திங்கள் 30–ஆம் நாள் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

## “அகரமுதலி இயக்ககம் வழங்கிய விருதுத் தொகை ரூ. 1 இலட்சத்தை வைத்து ஓராண்டை ஓட்டிவிடுவேன்”

தேவநேயப் பாவாணர் விருது பெற்ற முனைவர் கு.சிவமணி உருக்கம்!



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டஇயக்ககத்தின் 2020ஆம் ஆண்டுக்கான “தேவநேயப் பாவாணர்” விருது முனைவர் கு.சிவமணி அவர்களுக்கு வழங்கப்பட்டது. முதன் முதலில் தேவநேயப் பாவாணர் விருது பெற்றவர் என்ற சிறப்புக்குரியவரும், சட்டஆட்சியச் சொற்களஞ்சியத்தைத் தொகுத்து வெளியிட்ட வருமாகிய முனைவர் கு.சிவமணிஅவர்கள் இந்து தமிழ்நாளிதழுக்கு அளித்த நேர்காணலில், “90 அகவையுடைய நான் அகரமுதலி இயக்ககம் வழங்கிய விருதுத் தொகையான ரூபாய் ஒரு இலட்சத்தை வைத்து ஓராண்டை ஓட்டிவிடுவேன்” என்று உருக்கமாகக் கூறியிருக்கிறார்.இதனைப் படித்தபலர் முனைவர் கு.சிவமணிஅவர்களின் அகராதிப்பணிகளைப்பாராட்டியதோடு,90 அகவையுடையமுனைவர்கு.சிவமணி அவர்களுக்குத் “தேவநேயப் பாவாணர் விருது” வழங்கிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்அகரமுதலித் திட்ட இயக்ககத்தையும் வெகுவாகப் பாராட்டிவருகின்றனர்.